"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End.

ஸத்யம்வத.—Speak the Truth.

"Hitch your Wagon to a Star." "To Thine own Self be True."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—Satyameva Jayati.

[புத்தகம் 12.] 1904-ம் ௵ ஏப்ரில் ௴ [இலக்கம் 12.

## CULTIVATE FAITH WITHOUT CREDULITY, INDEPENDENCE WITHOUT ISOLATION AND TOLERANCE WITHOUT INDIFFERENCE.

"The heathen who bows in apprehension or awe before the image of an unknown god may be rendering all the worship he knows; but the soul that finds its divinity by knowledge and love has communion of another kind..............To know that the greatest men of earth are men who think as I do, but deeper, and see the real as I do, but clearer, who work to the goal that I do, but faster, and serve humanity as I do, but better, that may be an inducement to my humility, but it is also an inspiration to my life"—*The Story of the Mind.* (*Baldwin*).

"It is easy in the world to live after the world's opinion; it is easy in solitude to live after one's own; but the great man is he who in the midst of the crowd keeps with perfectness the independence of solitude."—*Emerson.*

"I understand that by churning the shastras the Pandits get the whey only while the devotees get the butter."—*Swami Dayananda Saraswati to Sri Ramakrishna Paramahamsa.*

"Tolerance means reverence for all the possibilities of truth; it means acknowledgment that she dwells in diverse mansions, and wears vesture of many colours and speaks in strange tongues; it means frank respect for freedom of indwelling conscience against mechanic forms, official conventions, social force; it means the *charity* that is greater than even faith and hope."—*John Morley.*

## "ஆரியக்கூத்தாடினாலும் காரியத்தில் கண்ணாயிரு."

"என்னை யறிந்திலே னித்தனை காலமும்
என்னை யறிந்தபி னேதும றிந்திலேன்
என்னை யறிந்திட் டிருத்த லுங்கைவிடா
தென்னையிட் டென்னை யுசாவுகின் றானே."—திருமந்திரம்.

"புத்திக்கெட்டாதது பத்திக்கெட்டும்" என்றும், "விக்ஞானமென்பது வியவகார ...ர்த்தி" யென்றும் பக்தியைப் பெரிதும் தூக்கிப் புத்தியைத் தாழ்த்தி யெழுதினதினால், புத்...

யின்றிப் பக்தி செய்யலாமென்று ஆழ்ந்து சிந்திக்கச் சக்தியில்லாதார் எளிதில் நம்பி யேமாந்து போகலாம். ஆகையால் அவர்கள் இத் தப்பெண்ணங் கொள்ளாதபடி "ஆரியக்கூத்தாடினாலும் காரியத்தில் கண்ணாயிரு" என்னும் வசனத்தைக்கொண்டு அவர்களுக்கு மிகவும் அவசியமான சில நற்போதனைகள் செய்ய உத்தேசங்கொண்டோம். இங்கே அவர்கள் கவனிக்கவேண்டிய மூன்று பெரிய விஷயங்களை யெடுத்து விவரித்துக் கூறுவோம்.

முதலாவது: பேதைமையின்றி பக்தியிற் பழகு.

இரண்டாவது: எல்லாருக்கும் மத்தியில் ஏகாந்தமாயிரு: அதாவது; புறத்துறவின்றி அகத்துறவு பூண்.

மூன்றாவது: உபேக்ஷையின்றி உள்ளம் போறு.

பக்தி, பக்தி யென்றால் என்ன? பக்தி யென்னும் ஸம்ஸ்கிருத பதத்துக்கு உண்மையான உள்ளன்பு பாராட்டுதலே சரியான பொருளாம். இந்த அன்பு எப்படிப்பட்டது? 'அன்புடையார் என்புமுடையர் பிறர்க்கு' என்றதினாலும்,

"அன்பினுமார்வ முடைமையதுவீனு
நண்பென்னு நாடாச்சிறப்பு."

என்றதினாலும் அன்பினுடைய இலக்ஷணங்கள் ஒருவாறு குறிக்கப்பட்டன. இன்னும் திருவள்ளுவர்,

"அறத்திற்கேயன்பு சார்பென்பவறியார்
மறத்திற்கு மஃதே துணை."

என்றதனாலும் அதன் இலக்ஷணம் குறிக்கப்பட்டுள்ளது. அன்பிலிருந்து ஆசையுண்டாகும்; அதிலிருந்து அளவற்ற சிறப்பமைந்த சிநேகமுண்டாகும். உள்ளன்பு கசிந்துண்டாகும் நேசத்திலும் மேலானது இவ்வுலகில் என்னுளது? ஏதுமில்லை யென்று நாம் சொல்லவும் வேண்டுமோ? இப்படி இவ்வுலகில் மற்றெல்லாவற்றிலும் மேலான சிறப்புள்ளதாகிய நேசத்தால் வரும் இன்பத்தை யனுபவிப்பவர் அதன்பயனை கடவுளிடத்தில் உள்ளன்பு வைக்கவறிந்து என்றுமழியாப் பேரின்ப சுகத்தை யனுபவிப்பர் என்று திருவள்ளுவர் சொல்லியிருக்கிறார். அன்பானது தர்ம சித்திக்கேயன்றி பகைமையை நீக்குதற்கும் அவ்வன்பே துணையென்றார். ஸேண்ட் பால் அன்பின் இலக்ஷணங்களை வெகு நன்றாக வெடுத்துக் கூறுகிறார். அதாவது:—

"அன்பு எல்லாத் துன்பங்களையும் பொறுத்துக் கொள்ளும், அது பக்ஷம் பாராட்டும்.
"அன்பு தன்னை மெச்சிக் கொள்வதில்லை, தன்னைப் புகழ்ந்தாலும் லெக்ஷியம் செய்வதில்லை,
"அது கோணலாய் நடந்துகொள்வதில்லை,
"தன்னலம் பாராட்டுவதில்லை,
"எளிதில் கோபம் கொள்வதில்லை,
"கெடுதி நினைப்பதில்லை,
"அநீதியில் மகிழ்ச்சியின்றி சத்தியத்தைக் கண்டுமகிழும்,

"எல்லாம் பொறுக்கும், எல்லாவற்றையும் நம்பும்,
"எல்லாம் கூடுமென்றெண்ணும், எல்லாவற்றையும் சகித்துக்கொள்ளும்."

பக்தி முதிர்ந்தால் முக்தி சித்தியாம் என்பது

" முத்திக்குவித்து முதல்வன் தன்ஞானம்
பத்திக்குவித்துப் பணிந்துற்றுப்பற்றலே"

என்ற திருமூலர் திருமந்திரத்தினால் விளங்கும். "பக்தி எல்லாவற்றையும் நம்பும்." என்று சொல்லியதின் பூரணக் கருத்தை வெளியிடவேண்டில் "அது எதையும் நம்பி மோசம்போகாது" என்பதை வருவித்துக்கொள்ளவும். ஏனெனில் உண்மையாக உள்ளபடி நம்பினால் அந்த நம்பிக்கை பலித்தேதீரும். "நம்பிக்கெட்டாரில்லை" என்பது ஸத்தியம். ஏனெனில், உண்மைப் பக்தி தன்னளவாகவே நிற்கும்.

" தானே தனக்குப் பகைவனுநட்டானும்
தானேதனக்கு மறுமையுமிம்மையும்
தானே தான்செய்த வினைப்பயன் துய்ப்பானும்
தானே தனக்குத் தலைவனுமாமே"—திருமந்திரம்.

ஆகையால், உண்மைப் பக்திக்கு ஒருபோதும் கேடுவிளைவதில்லை. அது எப்போதும் நன்மையேபயக்கும்.

" தன்னையறியத் தனக்கொருகேடில்லை
தன்னையறியாமற் றானேகெடுகின்றான்
தன்னையறியு மறிவையறிந்தபின்
தன்னையேயர்ச்சிக்கத் தானிருந்தானே."

தன்னைத்தானறியாத குறையால்தான் எல்லாக் கேடுகளும் வருகின்றன. இதற்குத் தான் குரு வேண்டுமென்று சொல்கிறது.

" அறிவுவடிவென் றறியாதவென்னை
அறிவுவடிவென் றருள்செய்தான் நந்தி
அறிவுவடிவென் றருளாலறிந்தே
அறிவுவடிவென் றறிந்திருந்தேனே."

யென்றார் திருமூலதேவர். 'இந்த வுண்மையை யறியத்தானா குருவருள் வேண்டுமென்று சொல்கிறது!' என்று உண்மையறியாதவர்கள் இதை யற்பமாக நினைப்பார்கள். உண்மையை உள்ளபடியறிந்தால் அவர்கள் அப்படி நினையார்கள். ஒருவன்வீட்டுத் தோட்டத்திலே பெருந் திரவியம் மண்ணின்கீழ் புதைபட்டுக்கிடக்கிறது என்று வைத்துக்கொள்வோம். இது தெரியாமல் அவன் அஷ்டதரித்திரனாய் அவதிப்படுகிறான். ஒரு கவளம் சோற்றுக்கு ஒன்பது வீடுபோய் பிச்சையெடுக்கு மிவன் வீட்டுக்கொல்லையில் பெருநிதியம் புதைபட்டுக்கிக்கிடக்கிறதென்று ஒரு ...ன் கூறி சொன்னால் அதைக்கேட்ட தரித்திரன் அதை அடைய எவ்வளவு ஆசைப்படான், ...சைப்பட்டுப் பயனென்ன? புதையலெடுக்கும் சாஸ்திர முணர்ந்த புண்ணியனொருவன் உதவி

யின்றி அதைத் தன்னா லடையமுடியாது. இப்படி மண்ணில் புதைந்துகிடக்கும் புதையலை யெடுக்கப் பிரயத்தனப்பட்டோர் எத்தனைபேர் ஆஷாடபூதிகள் வசம் சிக்கி கைப்பொருளையு மிழந்து கனகஷ்டங்களும்பட்டு, நரபலி முதலான கொடும்பாவச் செய்கைகளுக்கும் உள்ளாகிக் கடைசியில் ஒன்றுமின்றி அதோகதியாகப்போகிறார்கள். மண்ணில் மறைந்துள்ள இப்புதையலை வியவசாயமென்னும் சூக்ஷ்மாயுதத்தால் வெட்டிப்பரித்து வித்தென்னும் பலியிட்டு நீர்வார்த்தலென்னும் பூஜைசெய்து, ஓம்பலென்னும் தபசிருந்து, பொறுமையென்னும் பக்திசெய்து, 'மகசூல்' என்னும் பிரசாதம்பெற்று, வியாபாரமென்னும் புனர்பூஜைசெய்து அதன் பின்னரே பெறலாமென்று யாராவதுசெப்பினால் அவனைநம்பாது 'போபோ நீ பைத்தியம், இதுவெல்லாம் எனக்குத்தெரியாதா'? என்பார்கள். ஒரு ஆஷாடபூதிவந்து, ஆடு கோழி பலிகொடுத்து அர்த்தராத்திரியில் நான் பூஜைசெய்யவேண்டும், அப்பொழுதுதான் பொக்கிஷத்தைக்காக்கும் பூதங்கள் விலகுமென்று சொல்லி அவனை இல்லாதபடியெல்லாம் ஆட்டிவைத்தால் அப்போது எல்லாக் கஷ்டங்களையும் சந்தோஷமாகப்படுவான். கடைசியில் மோசம்போயுமழுவான். இந்த ஸ்தூல பொக்கிஷந்தேட இத்தனை பாடென்றால், ஈரேழுலகையு மொருங்கே கொடுத்தாலும் ஈடாகாத குறைநிறையற்ற அளவிலாப் பொருளாம் ஆத்ம சுகத்தைப்பெற எவ்வளவு கஷ்டம் நேரிடும். ஆகையால் உண்மையை யுள்ளபடி யுரைப்போர் பூரணானுபவிகளாக விருந்தாலன்றி அவர்களால் தீங்கேயன்றி நன்மை பயக்கமுடியாது. தனக்கு அந்நியமான ஒருவரை நம்பும் நம்பிக்கை யெப்போதும் பேதைமையேயாம். இந்தப் பேதைமையகற்றக் கூர்புத்தி யென்னும் † மந்திரவாளின்றி நம்மாலொன்றும் செய்யமுடியாது. இத்தேசத்தில் வாசாவேதாந்தம் பேசி அரைகுறையாக உண்மையைக் கண்டு பூரணானுபவம் சித்திக்குமுன் குருபீடத்துக் காசைப்பட்டுக் குறும்புகளியற்றி ஏழைமதிகளை மோசஞ்செய்து மஹாபாபங்களுக்குள்ளாகித் தாங்களுங் கெட்டுத் தங்களை யடுத்தவர்களையும் கெடச்செய்யும் ஆஷாடபூதிகளெத்தனையோபேர்கள் துறவிவேடம் பூண்டு தூய்மையின்றித் தாழ்மையியற்றி வாழ்விழந்து வன்கொடுமைசெய்து திரிகிறார்கள். இவர்கள் தவவேடத்தை நம்பி அவாந்தரமாகப் போகாமலிருக்க புத்தியின் சாதகமின்றி நம்மாலொன்றும் செய்யமுடியாது. புத்தியென்பது கூறியவளாயுதமொக்கும். அதை நாம் கைப்பிடித்தாளும் சக்தியுள்ளவர்களானால் அது நமக்குப் பரமசாதகமாகும். ஆளும் வன்மையில்லாவிடில் அது நம்மைப் பெருமைப்படுத்துவதுபோல்காட்டிக் கடைசியிற் படுகுழியிற் றள்ளிவிடும். 'Intellect' என்று சொல்லும் விக்ஞான சக்தியாம் கூர்புத்திக்கு யஜமானத்துவம் பொருந்தாது. அதற்குரிமையான சேவகத்துவம் அதற்கமர்ந்திருந்தால் அதைப்போல் இன்னுயிர்க்குற்றதுணை வேறில்லை. 'புத்தியிலும் பக்திபெரிது' என்றதனால் புத்திக்கெட்டாத அதிசூக்ஷ்மப்பொருளை யறியும் சக்தி பக்திக்குண்டாதலால் அந்த அர்த்தத்தில் அது பெரிதென்று கொள்ளலாமேயன்றி பக்தியிருந்தால் புத்தி வேண்டியதில்லையென்று அர்த்தங்கொள்ளக் கூடாது. புத்தியில்லாத பக்தி 'மூடபக்தி'யாம். இதையே பேதைமை யென்பர், ஆகையால் பேதைமையகற்றிப் பக்தியிற் பழகுதல்வேண்டும். இதற்கு எல்லாவற்றையும் புத்தியினாலாராய்த்து. புத்திக்கொப்பான மட்டிலே பக்தி செலுத்திவந்தால், பக்தியினால் புத்தி பிரகாசிக்க, புத்தி

† 'மனம் ஒருவழிப்பட்டது மந்திரம்'

னுலீ பக்திமேலிட்டு ஒன்றுக்கொன்று ஆதாரமாயிருந்து பக்தி சிரத்தை யுண்டாகி வளரக் கடைசியில் இகபரமிரண்டிற்கும் சாதகமாம் முத்திபெற்றுய்யலாம். இகத்தில் புத்திக்கெட்டாததொன்றில்லை.

நித்தியமுத்தசுத்தப்பொருளாம் ஸத்யம் ஒன்றே புத்திக்கெட்டாதது. அதுவும், ஆத்மப் பிரகாசத்தில் அடங்கி விளங்கப்பழகிய புத்திக்குப் பேராதாரமாயிருந்துதவி அந்த புத்தியின் சக்தியை மிகவும் விர்த்திசெய்து விளங்கச்செய்யும் பரமசாதகமாயுதவும். பிரம்மஞானமெய்தி பூரணமடைந்தவர்கள் உலகத்திற்குபகாரஞ்செய்யக் கருதி உலகதருமங்களையே யனுசரித்து நாம் அரைகுறையாகச்செய்யும் கடமைகளை அவர்கள் தங்கள் தீர்க்கதரிசன விசேஷத்தால் குற்றங் குறையின்றி பூர்ணமாகச் செய்து முடிப்பர். பகவான் ஸ்ரீகிருஷ்ணர் உலகவழிபட்டுப் உலகதர்மங்களை யனுஷ்டித்தே அர்ச்சுனனுக்கு ஆத்மஞான மூட்டினுரன்றி, 'எனக்காகவேண்டியதொன்றுமில்லை, நான் சொல்கிறபடிகேள், என் செய்கையைப்பார்க்காதே'யென்று சொல்லவில்லை. ஜனகமகாராஜாவின் உதாரணத்தைச் சொல்லி அர்ச்சுனனை நிஷ்காம்ய கருமஞ்செய்ய வற்புறுத்தினதன்றி, 'தனக்குச்செய்யவேண்டியது, மூன்றுலோகங்களிலும் அடையாதது அடையவேண்டியது, ஒன்றுமில்லாவிட்டாலும் தான் கருமத்தில் பிரவிருத்தித்திருக்கிறதை யெடுத்துக்காட்டி, "நான் ஒரு காலத்திலாவது ஜாக்கிருதையாய் கருமஞ் செய்வதில் பிரவிருத்திக்காமல் போனேனேயானால் மனிதர்கள் என்னைப்பார்த்து கெட்டுப்போவார்கள்" ' என்று வற்புறுத்திக் கூறியிருக்கிறார். (பகவத்கீதை, அத்-3, சுலோகம் 22, 23, 24-ல் பார்க்க.) ஆகையால் எப்படிப்பட்ட ஞானியானாலும் செய்கைக்கும் கொள்கைக்கும் வேற்றுமையிருந்தால் அவர் ஒருபோதும் உலகுக்கு உபகாரியாகமாட்டார். ஞானிகள் இப்படித் தானிருப்பார்களென்று சொல்வதற்கில்லை. ஆனால் அவர்கள் கொள்கைக்கும் செய்கைக்கும் உண்மையில் ஒருபோதும் வேற்றுமை இருக்கமாட்டாது. அப்படி வேற்றுமையிருந்தால் அவர்கள் ஞானிகளாகார். ஏனெனில் அவர்கள் எப்போதும் ஸத்யத்தைவிட்டுப் பிறழார். திரிகரண சுத்தியாக அவர்கள் எப்பொழுதும் ஸத்யத்தையே ஒட்டி நிற்பார்கள். பூர்ணானுபவம் பெற்றவர்கள் ஸத்யஸ்வரூபிகளே யாவார்கள். தேகத்திரியங்களிலும் பற்றுவையார். உடலையும் உயிரையும் திரணமாக நினைத்து ஸத்யத்தையே ஸ்தாபிக்க முயலுவார்கள். அவருடைய உள்ளத்தில் எப்போதும் கடவுள் திருக்கோயில் கொண்டு விளங்குவார்.

"அறிவுடையார்நெஞ் சகலிடமாவ
தறிவுடையார்நெஞ் சருந்தவமாவ
தறிவுடையார்நெஞ் சொடாதிப்பிரானும்
அறிவுடையார்நெஞ்சத் தங்குநின்றானே"

புத்திவிவேகமுள்ள பக்தன் இப்படிப்பட்ட ஞானசிரேஷ்டர்களைக் கண்டு வணங்குவதெப்படியிருக்குமென்றால்:—எட்டாப்பழத்துக்குக்கொட்டாவிவிடும் சோம்பேரியைப்போலாவது, ஏதோ தனக்கன்னியமாய்த் தானறியக்கூடாத தெய்வத்தின் பிரதிமையைக்கண்டு அஞ்சிக் கெஞ்சி நடுங்கும் பேதையின் பூசனைபோலாவது இன்றி, தன்னைப்போலவேயிருந்து தன்னிலும் மேலாய் தன்னிடத்துள்ள சக்திகள் பூரணமாய் விளங்கப்பெறும் பூரணனாகத் தன் குருவையறிந்து, அவருடைய மேன்மைக்குத் தாழ்ந்து, 'அவரைப்போல் நானுமாவேன்' என்னு முறுதிகொன்

டுழைக்க அவர் தனக்குக் காரணபூதராய் விளங்கக்காண்பான். இப்படி நம்முள்ளிருக்கும் சக்தியை, நம் உண்மையை, நமக்குப்பிரத்தியக்ஷமாகவிளங்கச்செய்யும்பொருட்டு தன் உள் மர்மங்களையெல்லாம் உள்ளபடி விளங்கச்செய்து பூரண அன்பே உருவெடுத்தவதரித்தது போல் எவரொருவர் விளங்குகிறாரோ அவரே 'குரு' வென்னும் உத்தம நாமத்துக்குரியவராவர். 'ஸத்குரு' எப்போதும் ஏகனே: ஒருவனே :தேவன், கடவுள், சிவன், சத்தியம் என்று பல நாமங்களானும் வழங்கும் உண்மைப்பொருள் ஒன்றே: அவன் போதிக்கும் முறை எப்போதும் 'நான், நீ யென்கிற வேற்றுமையில்லை' யென்னும் உண்மையே.

"நானென்றும் தானென்றும் நாடினேன் நாடலும்
நானென்றுந் தானென் றிரண்டில்லையென்பது
நானென்றஞானமுதல்வனே நல்கினன்
நானென்று நானும் நினைப்பொழிந்தேனே."—திருமூலர்.

கடவுளே என்னைப்போல் வந்து எனக்கு ஆத்மபோதம் செய்யும்போது சிறிதும் எனக்கு அந்நியமாயிருந்து என்னைக் கைதூக்கிவிடப் பார்க்கிறவர்களை நான் எப்படி நம்புவது; ஞானிகள் ஏதோ வீடுவாசல் நாடு நகரங்களைவிட்டு காட்டில் வசிப்பார்கள்; நகருள் வசியார்கள்; ஜனசமூகத்தில் சேரார்களென்பதெல்லாம் தப்பெண்ணம். 'நாட்டிலிருந்து நாட்டுக் கொப்ப நடப்பதும் சுலபம்; காட்டில் தனியிருந்து தன்னிஷ்டம்போல் நடப்பதும் சுலபம், ஆனால் நாட்டில் ஜனக்கூட்டத்தி னடுவேயிருந்து ஏகாந்தமாய்வசிப்பவனது சுவதந்திரத்தைக் கைவிடாமலனுசரித்து எவனொருவன் சுவயேச்சையாய் நடந்து வருகிறானோ அவனே மஹாத்மாவாவன்' என்று எமர்ஸன் கூறியிருப்பது முற்றும் உண்மையே. பின்னும் சிலர் "சாஸ்திரம்! சாஸ்திரம்" என்று சொல்லி பண்டிதர்களைப் பெருமிதம் பாராட்டி பாண்டித்தியத்தை சிறப்பித்து பாண்டித்தியமின்றி ஞானம் கிட்டாதென்று நினைக்கிறார்கள். இதுவும் தப்பெண்ணமே. மஹாபண்டிதரான ஸ்வாமி தயானந்த ஸரஸ்வதியவர்கள் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸரோடு பேசி அவர் வாய்ப்பிறப்பாய் வந்த அருள்வாக்குகளைச் செவிமடுத்துண்டானந்தித்து அவரைப் பார்த்துப் பின்வருமாறு செப்பினர்:—"சாஸ்திரங்களைக் கடைவதினால் பண்டிதர்களுக்குக் கிடைப்பது தயிரும் மோருமே; பக்தர்களோ வெண்ணெயெடுத்துண்கிறார்கள் என்று அறிந்து கொண்டேன்"—என்றார். பின்னும் ஒரு விஷயம் கவனிக்கத்தக்கது. பொறுமை, சமத்துவம் என்கிற பதங்களுக்கு 'இராமனுண்டாலென்ன இராவணனுண்டாலென்ன' வென்று உபேக்ஷையினால் இரண்டையும் சரியாக பாவிக்கும் பாவனையை அர்த்தமாகக்கொள்கிறார்கள். அது பொறுமையாவது சமத்துவமாவது ஆகாது. தனக்கு சாதகபாதக மிரண்டிற்கு மிடமில்லாதபோது அதைப்பற்றி உபேக்ஷயாயிருப்பது எல்லாருக்கும்சகஜமே. உண்மையறிந்த ஞானியின்பொறுமை யல்லது சமத்துவம் எப்படிப்பட்டதென்றால், நல்லது கெட்டது என்று பலவேறாகத் தோற்றும் தோற்றங்களினும், தோற்றத்திற்குப் பின்னால் உண்மை ஒன்றாயிருந்து விளங்குவதை யுணர்ந்து, வெளித்தோற்றத்தினுட்புகுந்து பார்க்கும் பார்வை விசேஷத்தால் பலபேதத் தோற்றத்தினும் காணும் உண்மைக்கு உகந்து உள்ளன்பு பாராட்டும் பேரன்பே 'பொறுமை' யென்றும் 'சமத்துவ' மென்றும் சொல்லத்தக்கதாம். ஆகையால் ஆஷாடபூதிகளாம் கபடநாடக

வேஷதாரிகளை நம்பி மோசம்போகாமலிருக்க எல்லாரும் புத்தியைக் கூர்மைப்படுத்தி யுபயோகித்துவரல்வேண்டும். கூர்புத்தியுள்ளவன் ஸத்தியத்தில்மட்டும் பற்றுள்ளவனாகவிருந்து நிச்சய புத்தியோடுழைப்பானானால் காரியத்தில் மோசம்போகக் காரணமேயில்லை. இந்த உண்மையை வற்புறுத்தவே “ஆரியக்கூத்தாடினாலும் காரியத்தில் கண்ணாயிரு” என்னும் உண்மை வசனத்தை உள்ளபடி யெடுத்துவிரித்தோதினோம். என் தாய் “வேதாந்தவிசாரம் செய்கிறேன் என்று இல்லறக் கடன்களைவிட்டு மோசம்போகாதே! ஜாக்ரதை! ஜாக்ரதை!!” யென்று பலகாலும் சொல்லி அவள் பிள்ளைகளுக்கு எச்சரிப்பாள். அவள் ‘புன்சிரிப்புத் தவழுமின்பமுகமலர’ இன்னருள் சுரந்து பன்னிப் பன்னிப் பலகாலும் சொல்லி ஹிருதயத்தழுந்திய வார்த்தைகள் இன்றைக்கும் என்றைக்கும் எவராலும் மறக்கற்பாலதன்றாம். ஆகையால் அவள் தன் இன்னருட்குழவிக்கோதிய மந்திரமாம் சுந்திர வசனத்தை யப்படியே இங்கு கீழே வரைகிறோம்.

“நீ விண்டதெதுவானாலும் வெட்டவெளியானாலும்
குடியிருந்த வீடதனைப் பாழதனாக்காதே:
பிச்சைக்குப்பைக்காரன் எச்சில்தின்னி யென்றிராமல்
எல்லாரையுங் கவனித்து எவரெவர்க்கு முரியதையீய்.”

உத்தமோத்தமமான இந்த உண்மைப் போதனையை உள்ளபடி யுணர்ந்து கொண்டாடி அமெரிக்கா தேசத்தில் பிரசுரமாகும் ஒரு மாதாந்தரப் பத்திரிகையில் எமர்ஸன் சிஷர்களில் ஒருவரான அப்பத்திராசிரியர் விஸ்தாரமா யெழுதியிருக்கிறார். *

ஸத்யானந்த சாந்தசர்மா.

* “The idea is prevalent in many circles and is taught by many teachers, especially those of Oriental philolsophy, that would we unfold and live the spiritual life, we need to isolate ourselves; give up business and social duties; that some peculiar and esoteric teaching and methods are necessary for the development of the Higher Life. 'Now' has never so taught. Soul Culture teaches that one can attend to the duties of, and enjoy, the objective life and thus make it the means of unfoldment and for the enjoyment of the spiritual life. A philosophy that does not fit one for this life, and especially that esoteric philosophy which unfits him for the daily life of parent, producer and friend, is not that which the 20th Century needs. By Soul Culture man is made more expressive in this objective world; better fitted to manifest that which he is in the real Soul-life,......Esoteric teahings that render this present life of less worth, of less enjoyment, of less expression, are productive of one sided and abnornal Soul growth and are not my idea of Soul Cutture. “I am in the world, but not of it” said the One who was the Flower of manhood. Live in the world! Help the world! Be not subject to the world.” * * * *

“I am glad to find that this is in harmony with an intelligent and rational interpretation of the Hindu Philosophy. In the October number of the Viveka Chintamani, a Tamil journal published at Madras, India, I find an account of a “Great Teacher of Vedanta Philosophy.” This is told of her teaching: “She said that it was a false notion that Truth is unreachable by the ordinary man who has perforce to live in the world and follow some profession for a livelihood, though he has cut himself off from the world in his heart of hearts. She preached *purity of heart and nobility of aspiration to reach the highest truth*,—nothing short of Truth absolute,—as the two essential requisites for realizing the higher life; and provided a person has attained to this stage of aspiration, he, or she, need not give up family or profession. On the other hand a truly aspiring soul and reflective mind will make use of the experiences of every day to build up a true and noble character, based on the essential truth of things and not on their apparent reality.”—Mr. *Henry Harrison Brown* in 'Now.'

# EXTERNAL WORSHIP.

## திருவள்ளுவர் சிவபூசை செய்த விவரம்.

பூசைகள்செய்தேன்காண்—சிவக்கியான
பூசைகள்செய்தேன்காண்.

1. வாசிக்குதிரைமேலேறிக்கேசரியின் வழியோடேசென்றுச்சுழியறியாமலும் - வேசிக்குளாசை விரகத்துடனேயான்-வெறும்பூசைமணியாட்டிவீணுக்கேயான் - ஆசித்துசற்குருதெய்வமிதுவென்று - அர்ச்சித்து ஆத்துமந்தன்னையறியாமல் - நேசித்துப்பூசை நிஷ்டையறியாமலும் நின்றேநிமித்தமாய்கண்டுரு செய்தேன்யான் — பூசைகள்செய்தேன்காண்.

2. கோலமறியாமல் காலையில் வில்வக்–கொழுந்தைமுறித்தினி கூடைகள் போலவும் - சாலவுந் தேவாரமோதித்துதித்துடன் - சங்கையறியாமல் பங்கப்பட்டேயினி - காலைதனிலெழுந்தாலயஞ்சுற்றிக்- கருத்தினில் வாசியைக்கண்டு துதியாமல் - சீலமலரையுயிரென்றறியாமல் - சென்று பறித்துநான் கொண்டுவந்தர்ச்சனை—பூசைகள்செய்தேன்காண்.

3. வானத்திலெழுந்த வாலாம்பிகையை மதியாலறிந்து கெதியடையாமலும் - ஏனந்தனில் மூலைத்தெழுந்த கொழுந்தை - யிறுக்கி நானினி முறுக்கிக் கிள்ளியே - ஞானப்பிரகாச மெய்ஞ்ஞான விந்தாகையால் - நாடிக்கருவூரில் நாதத்துடன்கூடி - மீனமேஷமறியாமல் குருவந்து - வீணதாம்பூசை விருதாவிற் செய்யவும்—பூசைகள்செய்தேன்காண்.

4. ஆத்துமலிங்கத் தமுரியைக்கொண்டு - அறிவினு லர்ச்சனை யான்துதியாமலும் – பார்த்திப லிங்கம் பிடித்துருமண்தனைப் - பாலித்துப் பூசித்துக் கங்கையைத் தூற்றினேன் - பூத்தமலர் கொண்டறுத்து ஆவிடைமேல் - பொழிந்து அர்ச்சனை வழிந்து பாய்ந்துமே - வேற்றுமை யென்றறியாமலுங்காரிய- வீணர் சொற்படியேயானும் பூசித்தேனே—பூசைகள்செய்தேன்காண்.

5. தில்லைக்குளத்தின்கரைநந்தவனத்தில் முல்லையிதழ்கொண்டு அர்ச்சனைசெய்யாமல் - கல்லைத் தெய்வமென்று சொல்லறியாமலும் - வில்வமலரை வெடுக்கென்று போட்டுயான் - அல்லலல்லோ இதுயானு மறியாமல் - அம்பாபூசையடுத்துங் கிடையாமல் - வெல்லு நீரிறைத்துப்புவிக்குள்ளாக - வெகுவுயிர்கொன்று வதைத்துப் பெலிசெய்து—பூசைகள்செய்தேன்காண்.

6. தெண்டிரைக்குள்ளே செழித்தமலர்க்குள்ளே - சீவனிருப்பது பாவமென்றுஞ்சற்றே - கண்டறியாமல் கருத்தால் பறித்துக் - கடைத்தேற பூசைநடத்தினேனிப்படி - அண்டர்கள் போற்றுமுடலுக்குள்ளாத்துமம் - அங்கிருப்பதென்றறியாமல் யானுமே - வண்டக்குருக்கள் மொழிதவாமல் - மனனத்துனுலே வலுவயுருச்செய்து—பூசைகள்செய்தேன்காண்.

7. காரணசற்குரு பாதமே நம்பியே - பூரணத்தைப்பார்த்துப் பூசைகள்செய்தேன்காண் - தாரணையென்றறியாமலுநேமதந் - தான்செய்து ஆத்துமலிங்கமறியாதே - வாரணிமாமலர் பாலாம்பிகைபதம் - வாருங்கருவூரில் வாழ்ந்திடும்போதிலே - பூரணையாகிய வாசியைவாவென்றுபாலித்து அன்னையின் பாதம்பணிந்தேனே—பூசைகள் செய்தேன்காண்.

8. விந்துநாதத்தொனியந்தம்பொருந்திய - அந்தரஞானச் சுகாதீதம் பெற்றுமே-இந்திரியசுக இன்பச்சுழிமுனை-சந்தனகுங்கும கந்தபரிமளத்தத்துவக்கியானந்தவமறியாமலும் - உத்தமஞான உபதேசங்காணகிலார் - வித்துவித்து நாத சத்தறியாலும் பெற்றபேரிப்படி சித்தர் சொல்வாக்கியம்—பூசைகள்செய்தேன்காண்

## SCINTILLATIONS FROM THE LIFE OF A KINDERGARTEN CHILD.
## MY SCHOOL AND SCHOOL EXPERIENCE.

"The whole duty of parent, teacher, preacher, author, orator, actor, is done, when they have caused their children to think. The whole duty of Man is done when he thinks. Thought does all the rest, when the dynamo is all ready and the wires all laid, the whole duty of the operator is done when he turns on the current and keeps every thing so that current can have unobstructed flow. Since THOUGHT IS POWER, all one's duty is done when he turns on the Thought current. After that he has only "to trust the current that knows its way" as Emerson says...... TO KNOW, HOW *to think and* WHAT *to think, is the sum total of Knowledge*: To THINK what you choose *is the sum total of duty*. This is the Human side of Life. The rest is the Divine side, and that Divine side through Infinite power of thought, does the work"—Mr. Henry Harrison Brown in NOW.

"Whatsoever things are true, whatsoever things are honest, whatsoever things are pure, whatsoever things are lovely, whatsoever things are of good report, THINK ON THESE THINGS."—*St. Paul.*



## பாலபோதமுறையும் பள்ளிப்படிப்பும்.

நான் ஒரு சிறுமி. இங்குள்ள பெண்கள் பாடசாலையில் படித்து வருகிறேன். இதுவரையில் எங்களுக்கு ஒரு கிழவர் பாடம் சொல்லிக்கொடுத்துக்கொண்டிருந்தார். இப்பொழுது ஒரு வாத்தியாரம்மாள் வந்து பாடஞ்சொல்கிறார்கள். அந்தம்மாள் புதிசு. போகப்போகத்தான் அவாள் குணமும் திறமும் தெரியவரணும். இதுவரையில் எங்கள் பள்ளிக்கூடம் கேட்பாரற்றுக்கிடந்தது. மாட்டைக்கொண்டுபோய் மந்தையிலடைத்துக் காலாற வீட்டுக் கோட்டி வந்துவிடுவதுபோல், "நாங்களும் பள்ளிக்குப்போகிறோம்" என்று பேருக்குப் போய்க்கொண்டு வந்தோம். இப்போது வீட்டுக்குவீடு சென்று பணம் சேர்த்து ஆராரோ பெரிய மனுஷாளெல்லாம் வந்து பள்ளிக்கூடத்தைச் சீர்ப்படுத்தப்பார்க்கிறார்கள். "கேள்விமுறை" யேற்பட்டிருக்கும் இக்காலத்திலாவது எனது குறையைச் சொல்லித் தீர்த்துக்கொள்ளலாமென்று என் சின்னப்புத்திக்குத் தோணினதை எங்கப்பாவிடம் சொன்னேன். அவர் "ஆண்டிசொல் அம்பலமேறாது" என்று சொல்லிவிட்டார். என்குறையை அடக்கியடக்கிப் பார்த்தும் அடங்குவதாகவில்லை. என் குறையை வெளியிட்டால்தான் தீருமென்று சொன்னேன். அப்படியானால் 'பேபருக்கு' எழுதுஎன்று சொன்னார். நான் சின்னஞ்சிறுமி எனக்கு வக்கணையாக எழுதத்தெரியாது. ஆகையால் நானும் என் தமக்கையுமாகச் சேர்ந்து இதையெழுதி யுங்களுக்கு அனுப்புகிறோம். எங்கள் பெயரை வெளியிடாமல் என் குறையைமட்டும் வெளியிடக்கேட்டுக்கொள்கிறேன். குற்றங்குறையைப் பொறுத்துத் திருத்தியச்சிடப் பிரார்த்திக்கிறேன்.

என்னுடைய முதல் குறையென்னவென்றால்:—எங்கள் பள்ளிக்கூடத்திலே வாத்தியார் குழந்தைகளைக் குழந்தைகளென்று பாராமல், பிரம்பால் "சுள்ளு, சுள்ளு" என்று அடிக்கிறார். இரண்டு மாசத்துக்குமுன் என்னை வாத்தியார் பளீரென்று பிரம்பால் அடித்துவிட்டார்

கை கொப்புளிச்சுப் போய்விட்டது. மத்தியானம் சாப்பிடப்போனபோது அந்தக்கையால் சாப்பிடமுடியவில்லை. என்ன செய்கிறது! அப்பாவோடு சொல்ல வெட்கமாயிருந்தது. கொப்புளிச்சுப் போயிருந்ததால் மருந்து போடணுமோ என்னமோவென்று அப்பாவிடம் சொன்னேன். அவர் ஈரத்துணியைச் சுற்றிவைத்து 'இதை அவிழ்க்காமல், இன்னொரு கையால் சாப்பிடு, விக்கம் வடிந்துபோம்' என்று சொன்னார். சாப்பிட்டுவிட்டு வருகையிலே ஒரு கடிதத்தை யெழுதிக்கொடுத்து "இதைப் பெரிய வாத்தியாரிடம் கொண்டுபோய்க்கொடு" என்று அப்பா சொன்னார். அதில் என்ன எழுதியிருக்கிறீர்களென்று கேட்டேன். இதைக் கொடுத்தால் உபாத்தியாயர் இனி யாரையும் அடிக்கமாட்டார். உன்னை அடித்த வாத்தியாருக்கு அபராதம் விழும்; அல்லது இன்னும் பெரிய தண்டனை கிடைக்குமென்று சொன்னார். "குருத்துரோகம் மஹாபாபம்" என்று அம்மாள் சொல்லக் கேட்டது எனக்கு அப்போ ஞாபகம் வந்தது. வாத்தியாருக்குக் கெடுதல்செய்து விட்டோமே யென்று எனக்கு துக்கம் வந்தடைத்துக் கொண்டு விட்டது. அந்தக் காகிதத்தைக் கிழித்துவிடும்படி அப்பாவைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டழுதேன். அப்போ என் வலியெல்லாம் 'எங்கேயோ போய் விட்டது.' வாத்தியாரைக் காட்டிக் கொடுக்காமல் தப்பித்துக் கொண்டால்போதுமென்றாய்விட்டது, நல்லவேளையாக அப்பாவும் என் வேண்டுகோளுக் கிணங்கினார். அதுமுதல் வாத்தியார் என்னை அடிப்பதில்லை. ஆனால் என்னைப்போலொத்த சிறுமிகளையும் என்னிலும் சிறு குழந்தைகளையும் வாத்தியார் சுள் சுள்ளென்று அடிக்கும்போது அந்த அடியெல்லாம் என்மேல் விழுகிறாப்போலிருக்கிறது. அப்பாவோடு சொன்னால் அனர்த்தம் விளையுமேயென்று பயமாயிருக்கிறது. சும்மாவிருப்போமென்றாலும் குழந்தைகளை யடிக்கிறபோது நான் படும் சங்கடம் எனக்குப் பெரிதாயிருக்கிறது. எனக்கே யப்படியிருக்கும்போது அடிபடுகிற குழந்தைகளுக்கு எப்படியிருக்குமோ! வெளியில் சொன்னால் வாத்தியாருக்கு அவதி! சும்மாவிருந்தால் சிறுகுழந்தைகளுக்கு அவதி! இந்த தர்ம சங்கடத்துக் கென்னசெய்கிறதென்று தெரியாமல் தத்தளித்துக் கொண்டிருந்தேன், என்னை யறியாமல் இதை யெழுதிவிட்டேன். எனக்கு தோஷம் நேரிடாமல் இதற்கு வழிபிறக்க வேண்டுமென்று ஸ்வாமியை வேண்டிக்கொண்டே யிருக்கிறேன். புருஷவாத்தியாரே யில்லாமல் எல்லாரும் பெண்வாத்தியார்களாக விருந்தால் இப்படி அடிபட வேண்டியிருக்காது என்று நினைக்கிறேன். அது எப்படியாமோ யார் கண்டார்கள் ?

நான் பள்ளிக்கூடம் போனதுமுதல் துரைசானி வந்து பரீக்ஷிப்பதுண்டு. இப்போ புதிதாய் துரைசானி வந்து 'ப்ரைஸ்' கொடுக்கப்போகிறாளாம். பள்ளியில் தடபுடல் செய்கிறார்கள். 'ப்ரைஸ்' என்றால் என்னவென்று நான் அப்பாவைக் கேட்டேன். துரைசானி வந்து கெட்டிக்காரக்குட்டிகளுக்கு என்னென்னவோ 'வெகுமதி' கொடுப்பாளென்று சொன்னார். 'வெகுமதி' என்றால் கெட்டிக்காரியாயிருப்பதற்காக இனாம் கொடுக்கிறதாம். எல்லாம் சரிதான். எங்களில் கெட்டிக்காரி யாரென்று என்னமாய்க் கண்டுபிடிக்கிறது? நாளைக்கு துரைசானி வரப்போகிறாளென்று இரண்டு நாளாக தினம் பள்ளிக்கூடத்தில் குட்டிகளைப் பொறுக்கிப் பாட்டும் ஆட்டமும் சொல்லிக்கொடுத்துப் பழக்குகிறார்கள். துரைசானி வந்தால் எல்லாருக்கும் சொல்லிக்கொடுத்ததை யல்லவோ பரீக்ஷித்துப் பார்க்கவேண்டும்? சிலபேரை மட்டும் பொறுக்கி அவகளுக்கு எல்லாம் சொல்லிக்கொடுத்து எங்களையெல்லாம் உம்மணாமூஞ்சிபோல் உட்கார்த்

வைத்து வாயைத்திறக்கவிடாமல் கையைக்காலை யாட்டவிடாமல் "பேசாதே பேசாதே, விஷமம் பண்ணாதே!" என்று வாத்தியார் சட்டதிட்டம் பண்ணிக்கொண்டு நவராத்திரி பொம்மைகளைப் போல் உட்கார்ந்திருக்கப் பழக்கினால் இது சரியா? எல்லாருக்கும் வாசிக்கவேண்டுமென்றும், பாட்டுப்படிப்புச் சொல்லிக்கவேண்டுமென்றும்தான் ஆசையாயிருக்கு. எல்லாருக்கும் சமமாகச் சொல்லிக்கொடுத்தால் அப்போ சரித்தான். சிலருக்கு உயர்த்தியாகவும் சிலருக்குத் தாழ்ச்சியாகவும் சொல்லிக் கொடுத்தால் அது சரியா? இப்படி ஏற்றந்தாழ்ச்சி பாராட்டி எங்களைத்தான் சிறுகுட்டிகளென்று எச்சுப்போடப் பார்க்கிறார்கள். அப்படியே துரைசானியையும் ஏய்க்கப் பார்க்கிறார்களே. நாளைக்கு வரப்போகிற துரைசானிக்குக் கண்குருடா! இவர்கள் வேஷத்தைக் கண்டு பிடிக்க அவளுக்குத் தெரியாதா? நாலுகுட்டிகள் ஆடிப்பாடி அழகாய் நடித்தால் அவர்களுக்குப் பின்னால் நாற்பது குட்டிகள் மூஞ்சியிறங்கி யுட்கார்ந்திருக்கிற போது முகப்பார்வையினால் இவாளுடைய பள்ளிக்கூடத்தின் வள்ளல் வெளியாகிவிடாதோ? துரைசானிகளெல்லாம் ரொம்பி கூர்புத்தியுள்ளவர்கள், நன்றாகப்படித்தவர்கள், உள்ளத்தை உள்ளபடி யறியும் சக்தி அவர்களுக்கு அதிகம் என்று எங்கம்மாள் எனக்கு அடிக்கடிச் சொல்லியிருக்கிறாளே. நாங்கள், (சிறு குழந்தைகள்,) யாரையும் ஏமாற்றப் பார்க்கக் கூடாதென்றும், பொய்சொல்லக் கூடாதென்றும், ஓரவஞ்சனை செய்யக்கூடாதென்றும், நான் மழலைச்சொல் மாறாத குழந்தையாயிருந்தது முதல் என் தாயார் எனக்கு அடிக்கடி சொல்லி வந்திருக்கிறாள். ஆகையால் இப்படியெல்லாம் செய்கிறது பிசகு என்று எனக்கு நன்றாக மனதில் பட்டிருக்கிறது. ஆனால், பெரியவாளெல்லாம் நாங்கள் செய்யக்கூடாதென்று தடுக்கப்பட்ட காரியத்தை எங்கள் கண்முன்னேயே செய்கிறார்களே! அதுமட்டும் குற்றமில்லையோ வென்று எனக்குப் பட்டது. நாமும் பெரியவர்களாகப் போனால் இப்படி யெல்லாம் செய்யலாமோ வென்று நினைத்தேன். உடனே எங்காத்துக்கு எங்கம்மாளைப் பார்க்கவந்த இரண்டு துரைசானிகள் ஞாபகம் எனக்கு வந்தது. அவர்களில் ஒரு துரைசானி சீமையிலேயிருந்து பெண்கள் படிப்பதைப் பார்க்கவேண்டுமென்று தள்ளாத வயசிலே கப்பலேறி இங்கே வந்தவளென்று அம்மாவும் அப்பாவும் அடிக்கடி சொல்லக்கேள்வி. இன்னொரு துரைசானி பெண்கள் பள்ளிக்கூடங்களை யெல்லாம் பரீக்ஷிப்பவர். இவாளிரண்டுபேரையும் எனக்கு நன்றாகத்தெரியும். பெரிய துரைசானியும், சின்ன துரைசானியும் அடிக்கடி கடிதமெழுதி யென்னைப்பற்றி விசாரிக்கிறதுண்டு. ஒருதரம் பெரியதுரைசானி இங்கேயகப்படாத மிகவும் அழகான வாடாத பூ ஒன்று சீமையிலிருந்தனுப்பி அதை யெனக்குக் கொடுத்து, துரைசானி என்னை சமர்த்தாகவிருக்கச் சொன்னாளென்று சொல்லச்சொல்லி அப்பாவுக்கு எழுதியிருந்தது எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது. அப்பா அந்தப் பூவைக் கொடுத்து துரைசானி "சமர்த்தாகவிருக்கச்சொன்னாள். பொய்சொல்லப்படாது என்று சொன்னாள். புரட்டுக்கூடாது என்று சொன்னாள். எல்லாருக்கும் நல்லவளாய், நல்ல மனசுள்ளவளா யிருக்க வேண்டுமென்று சொன்னாள்'—என்று படித்துப் படித்துச் சொன்னது எனக்கு நன்றாக ஞாபகத்திலிருக்கிறது. சின்னதுரைசானியும் அடிக்கடி எனக்கு புத்திசொல்லியெழுதுவள். இப்படியெல்லாம் சொன்னது பொய்யா—எல்லாரும் நம்மை ஏமாற்றவாளார்த்தார்கள்? என்று நினைத்தபொழுது எனக்கு மனதில் சொல்லத்தெரியாத ஒருவிதசங்கடம்

மும் துக்கமுமுண்டாயிற்று. அப்பாவிடம் என்குறையை வெளியிட்டுச் சொன்னேன். அவர் அம்மாள் சொன்னதும் துரைசானிகள் சொன்னதும்தான் நிஜம் என்றும், அதற்குச்சரியாக நடந்து கொள்வதுதான்நல்லது என்றும் சொன்னார். ஆனால் நான் பள்ளிக்கூடத்தில் பார்த்தது அதற்குச் சரியாகவில்லையே! அவ்வளவு பெரியவர்களெல்லாம் தப்புச்செய்கிறார்களே! இப்போநடக்கிற கெடுபிடியெல்லாம் நாளைக்குவருகிற துரைசானியை ஏமாற்றச் செய்வதாகத்தானே யிருக்கிறது! என்றேன். அப்பா அதற்கு ஒன்றும்சொல்லவில்லை. எனக்கென்னமோ பள்ளிக்கூடத்துக்குப் போவதுகூடப் பிடிக்காமலிருந்தது. அதையெல்லாம்பற்றிச்சொல்கிறது சரியாகவிராது. இப்படி பள்ளிக்கூடத்திற்குப் போய் மொந்தைபோல் உட்கார்ந்துவருவதைவிட, வீட்டிலிருந்து பாட்டும்படிப்பும் செல்லிக்கலாமே யென்றுஎனக்குப் பட்டது. அகத்திலே அப்பா அடிகடி "எதையும் நன்றாகப்பார்! பார்த்துப்பார்த்து பார்த்ததையெல்லாம் அடிக்கடிநினைத்து யோஜிக்கக் கற்றுக்கொள்!" என்கிறார். எனக்கு அம்மாள் சொல்லி மனதிற்பட்டதையும் பள்ளிக்கூடத்தில் நான் பார்த்ததையும் யோஜித்துப்பார்க்க "பொய்சொல்லக்கூடாது" என்று சொல்வது மெய்யானாலும், "இந்தக்காலத்தில் பொய்சொல்லாமல் ஆர் இருக்கிறார்கள்!" என்று அத்தையும் பாட்டியும் அடிக்கடி முணுமுணுத்துச் சொல்லிவந்தது சரிதானென்று நினைக்கும்படியாயிருந்தது. "பொய்சொல்லிவாழலாமா?" என்று முன்காலத்துப்பாட்டி சொல்லியிருக்க, "பொய்சொல்லாமல் வாழலாமா?" என்று இக்காலத்துப்பாட்டி சொல்கிறாளே. அம்மா அப்ப கேட்க அவள் அதைச்சொல்லப் பயந்துவந்ததால் அது சுத்தப்பொய் யென்றே யெண்ணியிருந்தேன். இப்போ பள்ளிக்குப்போய் வருவதில் நான் பார்த்தமட்டில் 'பொய்யும்புளுகும் வேண்டுந்தானோ'வென்று நினைக்கும்படியாயிற்று. இந்த எண்ணம் கொஞ்சகாலந்தான் என் மனதிலிருந்தது. ஏனென்றால் என் தாயார் "ஸத்யமேஜயம்" என்று அடிக்கடி சொல்லிவந்ததும் எங்கள் பாட்டி சொல்கிற பொய்யெல்லாம் வெளிப்பட்டு எங்கம்மாள் ஸத்யம் அவளைத்தலைகாத்ததும் எனக்கு நன்றாய் ஞாபகத்தில் வந்தது. வரவும், இந்தப்பொய் வேஷங்களையெல்லாம் வெளியில் காட்டிவிடவேண்டுமென்று எனக்குத்தோன்றிற்று. துரைசானிக்கே இதையெல்லாம் தெரியப்படுத்திவிடவேண்டுமென்று பார்த்தேன். வாத்தியார் அடிப்பாரேயென்று பயமாயிருந்தது. அப்பாவும் அதுகூடாதகாரியமென்று சொன்னார். இரகசியமாகச்சொன்னால் "புறங்கூறல்" குற்றமாமென்றார். பகிரங்கமாக வெளிப்பட்டால் குற்றமில்லையாம். ஆனால் சின்னக்குட்டியாச்சே தப்பில்லாமல் எழுதவராதேயென்று பார்த்தேன். என் தமக்கையும் நானும் பேசிக்கொண்டிருக்கையில், நான் என் குறையையெல்லாம் சொன்னால் இருவருமாகச்சேர்ந்தெழுதலாம் என்றாள். நாங்களிருவருங்கூடி எவ்வளவோயோசனைபண்ணி எத்தனையோதரம் எழுதிக்கலைத்து கடைசியில் அண்ணா பார்த்து இதைசரிப்படுத்தியெழுதிக்கொடுத்தான். இவ்வளவு நன்றாக எனக்கு எழுதவராதானதால் இதையெல்லாம் கண்டெழுதினால்தான் என்பேரால் இதை பேபருக்கு அனுப்பலாமென்றேன். இதற்கு அண்ணாவும் அக்காவும் சரியென்று சம்மதித்தார்கள். நானும் இதன்கீழே எனக்கு அண்ணா கொடுத்த கள்ளப்பேரைக்கொண்டு கையெழுத்துப் போடச்சம்மதித்தேன்.

இப்படிக்கு,

உண்மையுள்ள உற்பாதபிண்டம்.

# THE ILIAD OF HOMER.

## ஹோமர் என்னும் மகாகவிபாடிய

# இலியயுத்தம்.

## முதற்காண்டம்.

(335-வது பக்கத் தொடர்ச்சி.)

96. வேந்தநீ மடந்தைதன்னை விடுக்குக யாங்கள்யாரும்
ஈந்திடற் கொத்தவாற்றா லியம்பினனுனக்குமக்கில்
ஏந்தலோ டிகல்கொளேனீ ரிருவருமியைந்துநிற்க
வாய்ந்திடு முலகமன்னன் கோல்வழிமகிழ்ந்து மாதோ.

(இ-ள்.) அரசனே, நாங்கள் எல்லோரும் கிரிசையென்னும் பெண்ணை அவர்தந்தையிடத்து அனுப்பிவிடுதல் முறைமையாமென்று எண்ணுதலாலே நீ அவ்வாறே அவளை யனுப்பிவிடுக. அக்கிலனே நீயும் அரசனோடினிமேல் பகைகொள்ளாதே; நீங்களிருவரும் சிநேகப்பட்டு நடப்பீராயின் உலகமெல்லாம் அரசன் ஆணையில் அடங்கி நிற்குமென்பதிற் சந்தேகமில்லை.

97. வானவர் போலுமாண்பார் வலியுளாய் வானமாதின்
தானமர் தனயனாவ யாதலாற் சமரினெய்தும்
மேனிமிர் வரிசையெல்லாம் வீரநிற்குரியதாமேற்
கானமர் தெரியல்வேந்தும் காசினிக் கிறைவனன்றோ.

(இ-ள்.) உண்மையே, அக்கிலனே நீ தேவர்கள் போலப் பெருமைபெற்ற சத்தியையுடையாய் தெய்வமங்கையின் வயிற்றிற் பிறந்தவனாகின்றாய். ஆதலால் யுத்தத்திற் பெறக்கூடிய உயர்ந்த பெருமைகளெல்லாம் உன்னையே சேரவேண்டியவைதாம். ஆயினும் அகமம்னனும் உனக்குக் குறைந்தவனன்றே உலகத்தையெல்லாம் ஒருகுடைக்கீழாளும் ஒப்பற்ற அரசனல்லவா?

98. ஆதலாலிருவர்தாமு மகமகிழ்ந் தொருமைப்பட்டுத்
தீதறு முரிமையோடு வலிமையுஞ் சேரவாழ்க
பூதலம் புரக்குமன்ன நின்னைநீதடுத்துக்கொள்க
ஓதருமக்கிலன்ற னுருசினந் தவிர்ப்பன்யானே.

(இ-ள்.) ஆகையினாலே நீங்களிருவரும் ஒருமனப்பட்டு நேசித்துச் சந்தோஷித்து அரசன் உரிமையும் அக்கிலன் வலிமையும் ஒன்றற்கொன்று துணையாகப் பொருந்தும்படி வாழ்வீராக. அரசனே உன் கோபத்தை, நீ ஆற்றிக் கொள்வாயாக. அக்கிலன் கோபத்தை நான் ஆற்றி விடுகின்றேன்;

99. மருவுநம் படைக்குக்காப்பாய் மன்னிநங் குலத்துக்கெல்லாம்
ஒருவலில் பெருமைநல்கு மொப்பிலாவீரனாகும்
இருமையக் கிலனையாமும் மிழந்திடத் தகுவதாமோ
அரியவக் கேடுவாரா தமரர்கள் காக்கவன்றே.

(இ-ள்.) நம்முடைய சேனைகளுக்கெல்லாம் ஆதாரமாகி கிரேக்கரென்னும் நம்முடைய குலத்துக்குமுழுதும் நீங்காத பெருமையைத்தரும் ஒப்பில்லாத மகாவீரனாகிய மேன்மை பெற்ற அக்கிலனை நாம் இழத்தலாகுமோ? ஒருபோதும் ஆகாது. ஆதலால் அப்படிப்பட்ட கெடுதி நமக்கு வாராமல் தேவர்கள் நம்மைக் காப்பாற்றுவாராக. என்றுகூறினான்.

வேறு.

100. என்றுகூறி யிருந்தன னெத்தர்தான்
வென்றிமன்னும் விளம்புவ னையகேள்
நின்றன்மூப்பி னெடுமைகண் டஞ்சுதும்
ஒன்றும் வாக்குமிக் கொள்ளியதாகுமே.

(இ-ள்.) இவ்வாறு நெத்தர் சொல்லியிருத்தலும் அரசனாகிய அகமம்மனன் சொல்லுகின்றான். ஐயா, உம்முடைய வயோதிகம் மிகவும் கௌரவிக்கத்தக்கதே. நீர்சொல்லிய வார்த்தைகளும் நியாயமா னவைகளே.

101. ஆயினென்னை யவனகங் காரமும்
மேயவீம்பையும் வீட்டுவ தில்லையே
எயவன்ன னிணையில் செருக்கின்முன்
காயும் வேந்தருங் கைதொழல் வேண்டுமோ.

(இ-ள்.) ஆயினும் என்ன. அவனது அகங்காரத்தையும் முறட்டுப் பிடியையும் மாய்க்கவல்ல தொன்றில்லையோ? அவனுடைய மகாகர்வத்தைக்கண்டு எவ்வகைப்பட்டவர்களையும் சிக்ஷிக்கவல்ல அ சர்கூடக் கைகூப்பி வணங்கவேண்டுமோ?

102. அவனையெம்மத னிகமும் வீரரும்
கவினயாமுங் கழல்தொழல் வேண்டுமோ
நவமதாக நவின்றனை நானிலத்
தெவர்கொல் வேந்த ரிதற்குடனுவரே.

(இ-ள்.) அக்கர்வபுஞ்சனாகிய அக்கிலனை எம்முடைய சேனைகளும் வீரர்களும் அன்றியாமும் கூடக்காலில்வீழ்ந்து பணிதல்வேண்டுமோ? நீ சொல்வது மிகப் புதுமையாயிருக்கின்றது. இம்மானவீன மான செய்கைக்கு அரசனென்னும்பேர் வைத்திருப்பவர்க ளெவரேனும் உடன்படுவார்களோ?

103. இணையின்மாவலி யீந்துளர்வானவர்
அணையவன்னவற் கென்னினுமாண்டைமைத்
துணிவினன்மதி யாதிகழ்சொல்லவும்
பணிகொடேவர் பணித்துள ராங்கொலோ.

(இ-ள்.) உள்ளது, அவனுக்குத்தேவர்கள் இணையில்லாத மகாபலத்தை அருளியிருக்கின்றனர் ஆயினும் அதனாலெம்மை மதியாமல் துணிகரமாக அவமதிக்கவும் அத்தேவர்கள் கூறியிருக்கின்றார்களோ என்று கோபித்துக் கூறினான்.

104. என்னுமாற்ற மிசைக்குமுன் னக்கிலன்
முன்னின் வெஞ்சின மூண்டுமொழிகுவான்
மன்னுநீதி யிலாத வழையினுய்
உன்னை யித்துணை யுற்றதுபோதுமால்.

(இ-ள்.) இவ்வார்த்தைகளைச் சொல்லுமுன்னமே அக்கிலன் முன்னிலும் அதிககோபங்கொ ண்டு சொல்லுகின்றான். ஓ நீதிகெட்டுப் பழிச்செய்கைகளைச் செய்யும் வேந்தனே இத்தனை நாளாய் உ னைப் பின்தொடர்ந்து சேவித்தது போதும் போதும்.

105. புத்திகெட்டுன் னடிமையிற் போந்ததால்
இத்துணைப்பக லெய்த்துழன் றே னினிப்
பொத்திவாயுனைப் போற்றுந ரேவல்கொள்
பித்தநின்பணி பேணநினைப்பனே.

(இ-ள்.) புத்தி கெட்டுப்போய் உனக்கு அடிமையாகி உன்னைப் பின்தொடர்ந்துவந்ததனாலே இத்தனைநாளாய் மிகவருந்தினேன் இனிமேல் உனக்கெதிரே வாய்புதைத்துக் கைகட்டிநின்று சேவகம் செய்ய உடன்படுவார்களிடத்தே உனது ஆணையைச் செலுத்தி அவர்பணிவிடைகளைக் கொள்ளுக. பித்தனே இனிமேல் நீ எனக்குக் கோடிகொடுத்தாலும் உன்னேவல் கேட்டிருக்கக் கருதுவேனோ? ஒருநாளும் கருதேன்.

106. எனக்குநல்கு மிளங்கொடி தன்னைநீ
உனக்குவேண்டிக் கவர்ந்திடி னேதினேன்
இனிக்கொல்போரினி லக்கில னேனைநின்
றனக்குவேண்டித் தனிபடை யேற்பனே.

(இ-ள்.) எனக்கு உரிமையாகக் கொடுக்கப்பட்ட மடந்தையை நீ பலாத்காரமாகக் கவர்ந்து கொள்வாயாயின் இனிமேல் உன்பொருட்டுயுத்தத்தில் ஆயுதமென்பது தொடேன். நான் சொன்னேன்பார்.

107. சென்றதீமை பொறுத்திடத் தேவர்தாம்
இன்றெனக்குப் பணித்தலி னெண்ணிலேன்
நன்றுகேளித் திறநடந் தாலினி
உன்றனுவியென் வாட்கிரையூட்டுவேன்.

(இ-ள்.) நீ இதுகாறும் செய்தகுற்றங்களையெல்லாம் பொறுத்துக் கொள்ளும்படி தேவர்கள் எனக்குக் கட்டளையிடுதலின் நான் அவ்வாறே அவற்றைச் சிந்தியாமல் பொறுத்துக் கொண்டேன். இனி மேல் நீ என்னை இவ்வாறு அவமதிப்பாயானால் உன்னுவியை என்வாளாயுதத்துக்கு இரையாக ஊட்டுவேன் நிச்சயம் என்றனன்.

108. இனையகூறி யிருவரு நின்றனர்
அனையவாத மதனொடுந் தீர்ந்ததால்
புனையும் பூந்தொடை வீரரும்போயினார்
தினையுந் தாழ்ந்திடுஞ் சிந்தையில்லாரரோ.

(இ-ள்.) இவ்வாறு இருவரும் சொல்லி யோய்ந்தார்கள். அவர்களுடைய விவாதமும் அதனோடு முடிந்தது. பின்பு அவ்வீரர்கள் இருவரும் ஒருவர்க்கொருவர் எள்ளளவேனும் தாழும் எண்ணமில்லாதவர்களாய் தத்தம் இருப்பிடங்களுக்குச் சென்றார்கள்.

இன்னும் வரும்.

எஸ் முத்து ஐயர், பி. ஏ.

## சுகுண சுந்தரம்.

XV.

உலகில் ஸ்த்ரீ சாபல்யம் கொடிது. அஃதில்லாவர் அரிது. அரிய இம்மானிடப்பிறவியை யடைந்த நாம் நம்முடைய யௌவனபருவத்தை வீணில் பலவழிகளிற் போக்காமல் ஜிதேந்திரியராய்ச் சத்தியநெறி தவறாதிருப்போமானால், இம்மையிலும், மறுமையிலுமழியாத கீர்த்தியை யடையலாம். அப்படியல்லாமல் காமசமுத்திரத்தில் மூழ்குவோர்களிடம் பாவமும், பழியும் நீல்கும்; பல்வகைத்தான புகழறங்கள் யாவுமழியும்; எய்துமின்பமும், அதனாலெய்து நோவு நன்மரபும், செய்யுநோன்பும் நல்லொழுக்கு மேன்மைசாவு மெண்ணுறுமனிற்கும்; மண்மீதிற் பிறந்து பிணியேகுடிகொண்டு பேரின்பத்தைமறந்து சிற்றின்பத்தின்மேல் மையலாகிப் புன்மாதருடன் பொருந்துழன்று தடுமாறித்திரிதலோ ஜன்மசார்த்தகம்! உலகிலுள்ள மாந்தரையெல்லாம் யோக்கியரென்று நம்பற்பாலதன்று. ஆதலின், பெண்கள் எப்போதும் தனிவழிநடத்தல் கூடாது. அப்படிச்செல்லும் யுவதியைக் காணுமொருவன் சாபல்லியங் கொள்ளாமல் அவளை விட்டகலுவது மிக்கப்பிரயாசமான காரியந்தான். கற்புடைமகளிர் தங்களுக்கு எத்தகைய துன்பம் நேரினும், தூர்த்தனான மானிடனொருவன் அல்லது பலர் தம்மை வலியத்தழுவ மேல் விழுந்தாலும், பதிவிரதமகிமையால் தங்கள் மானத்தைக் காப்பாற்றிக்கொள்வார்கள். நளன் பத்நியான தமயந்திதேவியானவள் ஊழ்வினையால் அகோரமான காட்டில் தனிவழி நடந்தபோது, ஓர் வேடுவனா லிச்சிக்கப்பட்டு தன்னுடைய பதிவிரதாக்கினியால் அவனை எரித்து நீறாக்கினள். சீதாதேவியானவள் தன்னுடைய பேதமையால் (ஸ்த்ரீகட்குப் பேதமையென்பது சுவபாவகுணங்களுளொன்றாம்,) இளைய பெருமாளைக் கடுமொழிபகர்ந்தோட்டிவிட்டுத் தனித்திருக்கையில், துஷ்ட இராவணன்கையிற் சிக்கிப் படாதபாடும்பட்டுக், கடைசியில் தன்னுடைய பதிபக்தி விசேடத்தால் க்ஷேமமடைந்தனள். இன்னுமிப்படியே கற்பரசிகளின் சரித்திரத்தைக் கேட்டிருக்கிறோம். ஆகவே, பெண்கள் சுவாதந்திரியமாக எப்போதுமிருக்க யோக்கியர்களல்லர். அப்படி இருக்க நேரிடின் மானஹானிக்கான அபாயத்துக்குள்ளாவார்கள் என்பது தெரிந்த விஷயமே.

மேற்கூறிய மாளிகையில் நம்சுலோசனை யொன்றுந் தோன்றாமல் மயங்கினதாகச் சொன்னோமே. அந்த உத்தமி எவ்வாறு ஆயினள் என்று விசாரிப்பாம்:—

**சூநடான்:** (தனக்குள்ளாகவே) "நாம் மொழிந்த நயபய வார்த்தைகளொன்றும் பயன்படவில்லை; பேசா மடந்தையாக இருக்கின்றனள்; மறுபடியு[ம்] நயமான வார்த்தை பேசியே இவளை வஞ்சிக்[க] வேண்டும்." என்று சுலோசனையைப்பார்த்து "அடி, தித்திக்குஞ் செந்தேனே! நந்தவனத்தில் நீ உலாவுகையில் உன்னைக்கண்டது முதல் நான் மதனபீடிதனாகிப் படுங்கஷ்டத்திற்கோர் அளவில்லை. நீ கோரிய சுந்தர இராஜன் வீரசுவர்க்கத்தை அடைந்துவிட்டபடியால், இனி அவனைப்பற்றி நினைப்பதில் யாது[ம்] பயனில்லை. இந்த என்னொருமாளிகையே இவ்வளவு விசித்திரமாயிருக்கும்போது, எனக்கு[ள்ள] ஐசுவரியம் அளவிடப்படாது என்று நான் சொல்லாமலே நீ அறிந்து கொள்ளலாம். அடி கண்மணி! என்னுடைய பாக்கியமெல்லாம் உனக்கே[ ]தத்தஞ்செய்கிறேன். சுகுணசுந்தரர்கள் வானோ[ர]ஷயதைக் கேட்டுப் பரிதபித்துக்கொண்டிருந்த உன்னையும், சண்பகத்தையும் வேறு துஷ்ட அரசர்கள் கைப்பற்றாதபடி, நானும், சுவதனனும் மகா மாயாவியான சக்தியை ஏவித் தந்திரமாய் நீங்களுமறியாதவண்ணம் இங்கு கொண்[டு] சேர்க்கும்படி வேண்டிக்கொள்ள, அவளு ம[ங்]வாறு செய்தனள். நான் உன்னையும் என் றோழனான சுவதனனுக் குன்றோழியான சண்பகத்தையும் நாளையுதயத்தில் கல்லியாணஞ் செய்யத் தீர்மானித்திருக்கிறேன். அப்படிச் செய்வதினால் உங்களிருவருக்கும் யாதொரு கஷ்டமும், நஷ்டமுமில்லை. நித்யயுவதிகளாய்ச் சுகமடையலா மென்பதிலையமில்லை. சுந்தர இராஜன் மீதுள்ள ஆவலைத்தவிர்ப்பாய். என்னையே உனது நாயகனாக அடைவாய். நான் உன்னுடைய விசுவாசத்துக்குப் பாத்திரனாக நடந்

கொள்ள மாட்டுவேன். நான் சாமான்ய புருஷனென்றெண்ணாதே. இந்தக் கனகபுரிக்கு நானேயதிபன். எனக்கு இந்திரன், குபேரன் முதலானவர்களும் நிகரில்லை. வயதினாலும், ரூபத்தினாலு முனக்குத் தகுந்தவன் நானே! உன்னுடைய பிதா சாருதத்தன் முதலாக எல்லா ராஜர்களும் என் பெயரைக் கேட்டாலே நடுநடுங்குவார்கள். அடி, என் மனதையே கொள்ளை கொண்ட கள்வி! நவரத்னாபரணங்களும், உயர்ந்த பட்டாடைகளும், பொற்பாத்திரங்களும், திவ்வியாஸநங்களும் நானாவிதமான மஹமல் படுக்கைகளும், இன்னுஞ்சகல போக்கியங்களையும் நீயே யதேச்சையாயனுபவிக்கலாம்; என்னை உன்னிஷ்டப்படி ஆண்டு கொள்ளலாம். நானே உனக்கடிமை. அடிபொற்கொடியே! உன்னுடைய தேக காந்தியே இம்மாளிகையை அலங்கரிக்கச் செய்கின்றதே, என்னை மாரனிடத்தினின்று விடுவித்து இரக்ஷிக்க வேண்டிக்கொள்ளுகிறேன். அனங்கனுடைய கணைகளுஞ் சுறுக் சுறுக்கென்று பாய்ந்து என் மார்பைச் சல்லடைக் கண்களாகத் துளைக்கின்றனவே; மனம் பதைக்கின்றதே; மெய்சோருகின்றதே; பொறிகள் கலங்குகின்றனவே; இவ்விபத்திலிருந்து என்னைக்காக்குங் கடமையுனதேயாம். அடி! பிராணசகி! உனக்கு மிகுந்த புண்ணியம் உண்டடி!" என்று பலவாறு வேண்டினன்.

இந்தக் கர்ணகடூரமான வார்த்தைகளைக் கேட்டதும் சுலோசனைக்கு வந்த கோபத்திற்கெல்லையில்லை. ஆயினும் அவள் கோபத்தை வெளிக்குக்காட்டாமற் சாந்தமாகவே அவனுக்குத்தக்கபடி ஹிதோபதஞ் செய்வாளாயினள் :—

"மாதரா! பாபபுண்ணியங்களைப் பகுத்தறியும்படியாய்க் கடவுள் நமக்கு அறிவைக் கொடுத்திருக்கிறார். உன்னைப் பார்க்கும்போது நீ கூறியவண்ணம் இளம் ராஜகுமாரனாகவே காணப்படுகிறாய். தர்மாதர்மங்களையறிந்து இராச்சியமாளுமரசன் அந்நியஸ்த்ரீகளை இச்சிக்கலாகாது. ஆனால் என்னை விவாகமில்லாக் கன்னிகையாக எண்ணி இங்கு கொடுவந்திருப்பதாய் உன் மொழியினால் தெரிந்துகொண்டேன். அவ்வாறு என்னை விவாகமில்லாத பெண்ணென்று நினைத்து மணம்புரிய ஆவல் கொண்டிருந்தாலும், என் பெற்றோர்களின் சம்மதத்தைப் பெறாமல் எவ்வாறு மணம்புரியலாகும்? என்னை விவாகமில்லாப் பெண்ணென்றெண்ணவேண்டாம்; மண்டலாதிபனும், மாயாபுரியரசன் புதல்வனும், திக்விஜயஞ்செய்த சூரனுமான சுந்தர மகாராஜனை நான் என்னுடைய உத்தியான வனத்தில் முதல் முதலில் கண்டவுடன் காவிலேயே, எங்களிருவருக்கும் அத்புத விவாகம் தெய்வசங்கல்பத்தினால் நடந்தது. ஆதலால் நான் கன்னிப் பெண்ணல்ல. இப்பூமண்டலாதிபதியின் பத்நி என்று அறியக்கடவாய். பேதைகளான என்னையும், என் தோழியையும் வஞ்சக்களவாடி வந்தது ராஜநீதியல்ல. இஃது பஞ்ச மகாபாதகத்துள் ஒன்றாகும். ஓர் அழகிய பெண்ணைக்கண்டு இச்சை கொள்வது உலகில் மாந்தர்க்கியல்பே: ஆயினும், ஓர் மங்கையை முதல் முதலில் கண்டு காதல்கொள்ளும் போதே, அவள் தனக்குகந்த நாயகியாவளா, வரிக்கத் தகுந்தவள்தானா என்று உத்தமபுருஷன் அறிந்து கொள்ளுவான். சந்திரவமிசத்தோன்றலாம் துஷ்யந்த மகாராஜன் முதல் முதலில் சகுந்தலையை கண்ணுவரிஷியினுடைய ஆசிரமத்தில் கண்டபோது, மேற்கூறியவண்ணம் அவளைத் தனக்குகந்த நாயகி என்று கண்டுகொண்டதின்மேல் காந்தர்வவிவாகஞ் செய்துகொண்டு அவ்வுத்தமியைத் தன் நாயகியாக்கிக் கொண்டனன். பெரியோர்களறியாமல் அவ்விருவரும் ஏகாந்தமாய் மனமிசைந்து செய்துகொண்ட மணமேயாயினும், அதை ஆகாயவாணி, பூமாதேவி சாட்சியாக உலகத்தார் அங்கீகரித்தனர். அவ்விதமாகவே சுந்தர பூபதி என்னைத் தன் நாயகியாக அங்கீகரித்திருக்கின்றனர். நீ என்மீதிலுள்ள காதலை இக்கணமே வெறுக்கவேண்டும். உத்தமகுணம் வாய்த்த சுந்தரராஜன் தன்னுடைய பிதாவின் சத்தியத்தை நிலைநிறுத்தவன்றோ தன் தலையைக் கொடுத்தனர்! அவ்வாறே அமைச்சர்புதல்வனும் சுகுணரும் மித்திர காரியத்தைச் சாதிக்கமுயன்ற தன் தந்தையைக் களிக்கச் செய்யவன்றோ உயிர் துறந்தனர்!! ஆயினும் புண்ணியபுருஷர்களாம் சுகுணசுந்தரர்களை இறந்தவர்களாக எண்ணற்க. உன்னுடையவும், சுந்தனுடையவும் துற்செயல்களை எங்கேனுமிரு

அவர்கள் கண்ணோட்டமிட்டுக் கொண்டேயிருப்பார்கள். ஈசுவரபக்தர்களும், சத்திய சந்தர்களுமான அவ்வீரசிரோமணிகள், நீங்கள் எங்கள் மாட்டுச்செய்யும் அபராதத்தைக் கண்டு சகியார்கள். பிரகிருதத்தில் ஓர் காரணத்தை முன்னிட்டு மறைந்திருந்தாலும் கூடிய சீக்கிரத்தில் வெளிவருவார்கள். அவர்கள் கைலாயத்தில் என்னன்னை பார்வதியை வாமபாகத்தில் கொண்ட பரமசிவனுடைய அடியிணையில் விளையாடிக்கொண்டிருந்தாலும் இருப்பார்கள். வீணில் அவர்களுடைய கைவாளுக் கிரையாகாதீர்கள். என்னையும், என்றோழியையும் இக்கணமே ஹேமபுரியிலிருக்கும் என் தந்தைபக்கல் கொண்டுசேர்த்து மன்னிக்குமாறு வேண்டிக்கொண்டாலன்றி உங்களிருவருடைய உயிரும் சமனுலகுசேரும். மேலும், கொண்டகணவன் குரூபியேயானாலும், தரித்திரனேயானாலும், பண்டுதான் செய்தபலனெனவே கண்டுகொண்டு, மனங்கோணாது பரிந்தவன் பணியைச் செய்தேமகிழ்வார்கள் உத்தமிகள். தமயந்தி, சந்திரமதி, சாவித்திரிமுதலான உத்தமஸ்த்ரீகளைப்பற்றி நீ அறிந்திலைபோலும். உன்னுடைய சம்பத்தினுலெனக் கொன்றுமாவதில்லை. இதைப்போன்ற சம்பத்துக்கள் தேவையானது என்கண்மணியாம் சுந்தரவள்ளலுக் கிருக்கின்றன. என்னையும் என்றோழியையும் வஞ்சகமாய் களவாடிவந்த உங்களிருவரைக்காட்டிலும் கொடியவர்கள் வேறுயாவர் இவ்வுலகிலிருக்கின்றனர்! எங்களிருவருக்கும் இன்னுமெவ்வித கொடுந்துன்பங்கள்நேரினும், நாங்கள் எங்கள் நாயகமணிகளாம் சுந்தர சுகுணர்களையின்றி வேறெவரையும் கண்ணெடுத்தும் பாரோம். ஈசுவரியின் கிருபையால் அவர்கள் எங்கிருந்தாலும் வந்துசேருவார்கள், அபலையாம் என்முன் உன்னுடைய பெருமைகளைச் சொல்லிக் கொள்ளுவதில் பயன் யாதுமில்லை. உன்னுடைய சூரத்தனம் வஞ்சகமாய்க் களவாடி வந்ததினுலேயே நன்குவிளங்குகின்றதே! அட, பாவி! என்னைப்பார்த்து அடாதவார்த்தைகளாட வலுவில் காலபாசத்தை கழுத்தில் என் கட்டிக்கொள்ளுகிறாய்? காமக்கோட்டினுல் இராவணன் சமூலமா யழிந்ததையும், இந்திரன் மக்கினமடைந்ததையும், சந்தி[illegible]ன் பங்கமானதையும் ஆழ்ந்து யோசித்துப்பார். [illegible]னும் நான் சொல்வதைக்கேள். பிறன் மனைவியை இச்சித்து அவர்களை வலிமை செய்வதனுல் பகை, பழி, பாவம், பயமாகிய நான்கும் சேரும்; தனக்கிருக்கும் பெருமையெல்லாம் போகும்; இறுதியில் நாசமுண்டாகும். கொலை, களவுமுதலான மகாபாதகங்கட்குங் காரணமாய்க் காமக் கடலிலாழ்ந்து என்மனம் வருந்துகிறாய்? பாஞ்சால ராஜனு[illegible]ய தவப்புத்திரியும், அக்கினிசம்பவையும். பஞ்சபாண்[illegible]ர்களுடைய பத்நியும், பதிபக்தி யுடையவளுமா[illegible] திரௌபதாதேவின் நிமித்தமாக கீசக உபகீசகர்க[illegible]ழிந்ததைக் கேட்டிலையோ? நீ அறியாச்சிறுவனென்[illegible]ரங்கி இங்கனம் புத்திகூறலாயிற்று. என்னுடை[illegible] கற்புத்தீயே உன்னை எரிக்கும். ஆனுல் எனது நா[illegible]கமணியின் வரவை எதிர்பார்த்துக் கொஞ்சம் பொ[illegible]மையையும் வகிக்கலாயிற்று." என்றிவ்விதமா[illegible] சுலோசனை சொல்லி முடிந்ததும், சுரூபன் "அடிகட்டழகி! என் உபயோகமற்ற வார்த்தைகளாடவேண்டும்? நான் உன்னைவிடப் போகிறதில்லை. சுந்தர[illegible]வது சுகுணனாவது இனிவருவார்கள், என்றவீண[illegible] எண்ணத்தை விட்டொழித்துவிடு" என்று சொல்லிக்கொண்டே அவள்கையைப்பற்ற பக்கலிலணுகினான். உடனே சுலோசனை தான் பூசித்துவந்த பரா[illegible]சத்தியை மனதில் தியானித்துகொண்டு, ஏ, ஜகதம்பிகே! நான்பதிவிரதை என்பது உண்மையானல் எனதுநாயகனன்றி இதரபுமான் என்னைத்தொடுவனேல், அவன் என்னுடைய கற்புத்தீயால் எரிக்கப்பட்டு சாம்பலாகக் கடவன்" என்று உறத்த சப்தத்துடன் கூவிச் சித்திரப்பாவையைப்போல் அசைவற்றுத் தனது கண்மூடியவண்ணமே தேவியைக்குறித்து நிஷ்டை புரிந்தனளாயினள்.

* * * *

## XVI

"உனக்குத் தெரிந்த ஹிதோபதேசத்தையே இன்னுஞ் செய்வையேல் நீ உண்மையின் வழி சாருவாய். உனக்கு மேன்மேலும் மங்களமாகவே முடியும்." என்று ஓர் அசரீரிவாக்குத் தொனித்தது. இந்த வாக்கைக் கேட்டதும் சுலோசனை திடுக்கிட்டு தேகஞ்சிலிர்த்து, மூடிய கண்களைத் திறந்து, நாலா[illegible] பக்கத்திலும் நோக்குகையில், தன்னை வலிமைசெய்யத் துணிந்து நிற்கும் ஆடவனையின்றி வேறு ஒருவ[illegible]மின்மையால், சற்றே மனந்தளர்ச்சி யடைந்தாலு[illegible]

